20th September 1958]

நம்முடைய ராஜ்ய சர்க்காரின் யோசனைகள் அங்கு வைக்கப்பட்டு "லிக்விடேஷன்" இப்பொழுது செய்யவேண்டாம் என்று உயர்நீதி மன்றத்திடம் வற்புறுத்துவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதை சர்க்கார் செய்ய முடியாது. பங்குதார்கள் எல்லோரும் சேர்ந்து அதை நடத்தவேண்டுமென்பதற்காக உயர்நீதி மன்றத்திற்கு அவர்கள் மனுக்கள் போட்டு, அட்மினிஸ்டிரேட்டர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த "அட்மினிஸ்டிரேட்டர்கள்" இந்த மில்லை நடத்துவதற்காக முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். ரூ. 5 லட்சம் கடன் வாங்கி பாக்கியிருக்கிற சம்பளத்தை கொடுத்தார்கள். மேற்கொண்டு கடன்வாங்கி இந்த மில்லை நடத்துவதற்கு முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். இந்த முயற்சிகளெல்லாம் எந்த நிலைமையில் இருக்கின்றன என்டதை பரிசீலனை செய்து உயர்நீதி மன்றம் முடிவு செய்யும். தொழிலாளர்கள் பிரதிநிதிகள் உயர்நீதி மன்றத்தில் தங்கள் வாதங்களைச் சொல்லிக் கொள்ளலாம்.

MR. SPEAKER : Questions are over.

## II.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER.

### BILL PASSED BY THE COUNCIL.

MR. SPEAKER : I have to announce that the Madras District Municipalities (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 27 of 1958) and the Madras City Municipal (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 28 of 1958) have been passed by the Legislative Council on the 18th September 1958 without any amendment.

## III.—CALLING ATTENTION TO THE RETRENCHMENT OF PEONS IN THE COMMERCIAL TAX DEPARTMENT.

MR. SPEAKER : The hon. Member, Sri K. Anbazhagan, has given notice of a motion under rule 40. He will please refer to it briefly.

* SRI K. ANBAZHAGAN : அவைத் தலைவர் அவர்களே, சென்னை அரசாங்கத்தினுடைய வணிக வரித் துறையிலுள்ள கடைநிலை ஊழியர்களாக இருந்த ஏறத்தாழ 240 ஊழியர்கள் இன்று திடீரென்று வேலையிலிருந்து நீக்கப்படுகின்ற ஒரு இக்கட்டான நிலைமை தோன்றியிருக்கிறது. கடந்த 1958-ம் வருஷம் ஆகஸ்ட்டு மீ 27ந் தேதியிட்ட அரசாங்க ஆணை 3153-இன் படி அவர்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு உத்தரவில் அவர்களெல்லாம் 1958-ம் வருஷம் அக்டோபர் மீ 1-ந்தேதியிலிருந்து வேலையிலிருந்து நீக்கப்படுவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள். வணிக வரித்துறையானது காமதேனு, கற்பக விருட்சமாக இருந்தபோதிலும், அதில் ஏற்கனவே கடைநிலை ஊழியர்களாக இருந்து துன்பப்பட்டுக்கொண்டிருந்தவர்கள் இப்பொழுது கடைத் தெருவில் நிற்கின்ற நிலைமைக்குத் திடீரென்று ஆளாக்கப்பட்டிருப்பது மிகுந்த வேதனை அளிப்பதாகும்.

இந்த 240 ஊழியர்களும் வேலையைவிட்டு நீக்கப்பட்டால், அவர்களைச் சார்ந்த குடும்பத்தினர்கள் ஏறத்தாழ 1,000 பேர்கள் அல்லலுற்று, வாழ்க்கை நடத்த முடியாமல் துன்பத்திற்கு ஆளாக்கப்படுவார்கள். வணிகவரி துறையைப் பொருத்தவரையிலே டாக்டர் லோகநாதன் அவர்கள் சீர்திருத்தம் செய்யவேண்டுமென்று கூறிய ஒரு கருத்தின்படி இந்த நடவடிக்கை எடுக்கப்படுகிறது என்று ஒரு அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. டாக்டர் லோகநாதன் அவர்கள் இப்படி கடைநிலை ஊழியர்களை வேலையைவிட்டு நீக்குவதால் பெரிய சீர்திருத்தத்தை எற்படுத்தலாம் என்ற கருத்தைத் தெரிவித்திருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. டாக்டர் லோகநாதன் அவர்கள் அப்படியே

இவ்வாறு தெரிவித்திருந்தாலும்கூட, கடைநிலை ஊழியர்கள் நீக்கப்படுவதால் ஒரு அரசாங்கமும் மிகுந்த முன்னேற்றம் அல்லது மிச்சம் அடைந்துவிட முடியும் என்று சொல்லுவதற்கில்லை. கடைநிலை ஊழியர்கள் வேறு தொழில் தேடுவதற்குள்ள வாய்ப்பு இல்லாதவர்களாக இருக்கிறார்கள். வேறு இலாகாக்களில் வேலை கொடுப்பதில் அவர்களுக்கு முதல் இடம் தரப்படும் என்ற கருத்தை அரசாங்கம் தெரிவித்தாலும், 10 ஆண்டு வரை ஊழியம் செய்தவர்களிலிருந்து, 5 ஆண்டுக்குக் குறையாமல் பணி செய்த ஊழியர்கள் வேறு இலாகாவில் அரசாங்கத்தினாலேயே நியமிக்கப்பட்டாலொழிய அவர்களுடைய 5, 10 ஆண்டு ஊழியமானது அவர்கட்குப் பயனற்றதாகி விடுகிறது. எனவே, இப்படிப்பட்ட நிலைமையில் உள்ள 240 ஊழியர்களையும் இப்பொழுது வேலையிலிருந்து நீக்குகிற அந்தஅரசாங்க ஆணையை உடனடியாக அரசாங்கம் நிறுத்திவைக்கவேண்டும். அவர்களை வேலையைவிட்டு நீக்குவது சிக்கனம் என்று கருதாமல், அவர்களுடைய தொண்டைக் கருதி, 10 ஆண்டு, 5 ஆண்டு ஊழியம் கெடாது வேறு துறையில் அவர்கள் வேலை தேடும் வாய்ப்பு அவர்களுக்கு உடனடியாக இல்லை என்பதைக் கருதி, அவர்களை வேலையிலிருந்து நீக்கும் உத்தரவை அரசாங்கம் நிறுத்திவைக்கவேண்டும். மாறாக அந்த உத்தரவு அமுலாக்கப்பட்டு அவர்கள் வேலையைவிட்டு நீக்கப்பட்டால், அந்த 240 ஊழியர்களும், அவர்களைச்சார்ந்த குடும்பத்தினரும் மிகவும் பரிதாபமான நிலைமைக்கு உள்ளாவார்கள். ஆகவே அந்த உத்தரவை நீக்க வேண்டும் என்று அவர்கள் கனம் முதல் அமைச்சர் அவர்களையும், தொழில் துறை அமைச்சர் அவர்களையும் தந்தி மூலம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அருள் கூர்ந்து கவனித்து அமைச்சர் அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுப்பதற்காக, நான் தொழில்துறை அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு இதைக் கொண்டுவருகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Speaker, Sir, subsequent to 1953, many changes have been brought about in the tax structure such as the introduction of a single point tax on a number of commodities from 1st April 1957, the introduction of inter-State sales tax and the imposition of additional excise duties on sugar, textiles and tobacco in lieu of sales tax on them. These have thrown some heavy additional work on some divisions and have lightened the work in the case of some others and thus the charges of the Deputy Commerical Tax Officers have become lopsided in many cases. The Government considered that this state of affairs should be remedied. They also considered that there should be some reduction in expenditure at least on account of the abolition of sales tax on the three commodities, namely, textiles, sugar and tobacco. Dr. Lokanathan who examined the question of simplifying the system of sales tax in force in this State also recommended certain changes in the administrative set up, mainly, the separation of the assessment and appeal work and the formation of an Intelligence wing in the Department. After examining the matter, the Government have issued orders in G.O. Ms. No. 3153, Revenue, dated 27th August 1958 for an interim reorganization of the Commercial Tax Department with effect from 1st October 1958 to the extent possible within the framework of the existing Madras General Sales Tax Act, 1939. Such of the proposals like the separation of the assessment and appeal work which could not be given effect to under the framework of the existing Act will be given effect from 1st April 1959 when the new Sales Tax Act comes into force. The reorganization will result in the retrenchment of 179 peons according to the Board's report and not 240 peons as stated by the hon. Member. The number of peons proposed to be retrenched, namely

20th September 1958] [Sri R. Venkataraman]

179, is for the entire State and will probably work up to one peon per office roughly. However, it is proposed to issue instructions to the District Officers of other Departments to absorb the peons with more than one year's service retrenched in the Commercial Tax Department of each district after discharging the temporary hands in their departments who have put in less than one year's service and in the new vacancies that may arise. Thus it will be seen that the Government are already taking steps to provide alternative employment to the peons to be retrenched from the Commercial Tax Department.

## IV.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS APPROPRIATION (NO. 5) BILL, 1958, (L.A. BILL NO. 31 OF 1958).

10–20 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That the Madras Appropriation (No. 5) Bill, 1958 (L.A. Bill No. 31 of 1958) be taken into consideration."

Sir, this Bill is in accordance with the grants already sanctioned by this House.

(Deputy Speaker in the Chair.)

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Appropriation (No. 5) Bill, 1958 (L.A. Bill No. 31 of 1958) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 (with the schedule), clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir. I move—

"That the Madras Appropriation (No. 5) Bill, 1958 (L.A. Bill No. 31 of 1958) be passed."

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Appropriation (No. 5) Bill, 1958 (L.A. Bill No. 31 of 1958) be passed."

The motion was put and carried and the Bill was passed.

### (2) THE MADRAS APPROPRIATION (NO. 4) BILL, 1958 (L.A. BILL NO. 32 OF 1958).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"That the Madras Appropriation (No. 4) Bill, 1958 (L.A. Bill No. 32 of 1958) be taken into consideration."